உ

# கோடை நாற்பது




ஆசிரியர்,

கவிஞர் கதி. சுந்தரம்

தியாகராசர் கல்லூரி

மதுரை

---




கிடைக்குமிடம்:

பாரி நிலையம்

59, பிராட்வே

சென்னை-I

# படைப்பு

தமிழ்நாட்டின்மீதும், தாய்மொழியாம் தமிழின்மீதும், தமிழ் மக்கள் அனைவர்மீதும் ஒல்லும் வகையால் எல்லாம் உளமார்ந்த அன்பினைக் காட்டிவருபவரும்—தாய்மொழியும் தமிழரும் உயர்வுபெறுதலே தமிழ்நாடு உயர்வு பெறுதற்கு உரிய வழி என்பதை நன்கு உணர்ந்து, தம் சொற்பொழிவுகளில் இவ்வுண்மையை இடையறாது எடுத்துக் கூறுபவரும், எவரிடமும் மலர்ந்த முகத்தோடு பழகுபவரும், மன, மொழி, மெய்களால் தூயவரும், மேனாடுகள் சுற்றிப் பரந்த அறிவினைப் பெற்றவரும் ஆகிய உயர் திரு. கரு. முத்து. தி. சுந்தரம் செட்டியார் அவர்கள் திருமுன் இந்நூலைப் படைக்கின்றேன்.

— கதி. சுந்தரம்

# நன்றியுரை

மதுரை மாவட்டத்தில் உள்ள, 'கொடைக்கானல் மலை' என்று இப்பொழுது வழங்கப்படும் மலையே கோடை என்று இந்நூலில் குறிக்கப்படுவது. கோடைக் காலத்தில் இன்பம்தரும் கோடை மலையின் இயற்கைக்காட்சிகளைப்பற்றிய நாற்பது வெண்பாக்களை உடையது இந்நூல். மதுரை மீனாட்சி மில் டைரக்டரும், ஆ. தெற்கூர் விசாலாட்சி உயர்நிலைப்பள்ளித் தலைவரும் ஆகிய உயர்திரு கரு. முத்து. தி. சுந்தரம் செட்டியார் B. Com, அவர்கள், கோடை மலைக்கு வருமாறு என்னை அழைத்திருந்தார்கள். அதனால் நான் கோடைவளத்தைக் காணும் பேறு பெற்றேன்; அங்குச் சில பாக்களை அவர்களிடம் பாடிக்காட்டினேன். பிறகு அவர்கள் காட்டிய ஆதரவும், ஊக்கமுமே என்னை இந்நூல் முழுமையும் பாடுவதற்குத் தூண்டின. பொருளுதவிபுரிந்து இந்நூலை வெளியிட முன்வந்த தமிழ்ப்பெரியார் உயர்திரு. கரு. முத்து.தி. சுந்தரம் செட்டியார் அவர்கட்கும் இந் நூலுக்கு அணிந்துரை தந்துதவிய, தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர், டாக்டர் மா. இராச மாணிக்கனார் M. A, M. O. L., L. T, Phd, அவர்கட்கும் என் நன்றி உரித்தாகுக.

அவ்வப்போது ஆவனபுரிந்து உதவிய தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறையினர் அனைவர்க்கும் என் நன்றி.

சிறப்புரையோடு அழகுற அச்சிட்டும் தந்த விவேகா நந்தா அச்சக உரிமையாளர் திரு. கே. பழனியப்பபிள்ளை அவர்கட்கும் என் நன்றி உரியது.

இன்னா நாற்பது, இனியவை நாற்பது, களவழி நாற்பது, கார் நாற்பது முதலிய நாற்பதின் கூட்டங்களைச் சுவைத்த தமிழ்ப்பெருமக்கள் கோடை நாற்பதையும் வரவேற்பர் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அவர்கட்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கோடையைக் கண்டு மகிழ்க!

கவிதையைப் பாடி மகிழ்க!

தியாகராசர் கல்லூரி
மதுரை
1—12—'54

கதி. சுந்தரம்

# அணிந்துரை

பேராசிரியர், டாக்டர், வித்துவான்

**மா. இராசமாணிக்கனார் அவர்கள்**

M. A., M. O. L., L. T., (Phd.,)

தமிழ்த்துறைத் தலைவர்

**தியாகராசர் கல்லூரி, மதுரை**

ஏறத்தாழக் கி. பி. 5-ஆம் நூற்றுண்டில் சோழப் பேரரசனாக வாழ்ந்த கோச்செங்கட்சோழன்மீது பொய்கையார் என்னும் புலவரால் களவழி நாற்பது என்னும் நூல் பாடப் பட்டது. கோச்செங்கட்சோழன் போர்க்களத்தில் ஆற்றிய வீரச்செயல்களைப் பாராட்டி இந்நூல் இயற்றப்பட்டது. இம்முறையில் கோடைமலையின் சிறப்பையும் இயற்கை யமைப்பையும் ஆங்கு நடைபெறும் பிற நிகழ்ச்சிகளையும் நாற்பது பாக்களில் கூறும் இந்நூல் கோடை நாற்பது எனப் பெயர்பெற்றது சாலப் பொருத்தமாகும்.

கோடைமலை ஏறத்தாழ 1800 ஆண்டுகளுக்கு முன்னரே சங்க நூல்களில் இடம் பெற்றுள்ளது. அங்குக் கோடைப் பொருநன் கடியநெடு வேட்டுவன் என்ற குறுநில மன்னன் வாழ்ந்து வந்தான். அவனது வீரத்தையும் கொடையையும் பாராட்டிப் பெருந்தலைச்சாத்தனர் பாடியதாகப் புறநானூற்றில் ஒரு செய்யுள் காணப்படுகின்றது.

கோடைமலை பல சிற்றூர்களைத் தன்னகத்தே கொண்டது; வாழை, காப்பி, தேயிலை, கொடிமுந்திரி இவற்றிற்குப் பெயர்பெற்றது; இயற்கையன்னையின் எழிலைத் தன்னகத்தே கொண்டது; இக்காலச் செயற்கை அழகும் (கோடைக்கானல் நகரும்) சிறப்புற அமையப்பெற்றது. அங்குள்ள காடுகளில் காட்டெருமைகளும் மான்களும் வாழ்கின்றன. கோடைமலைமீது வானிலை ஆராய்ச்சிக் கூடம், எழில்மிக்க ஏரி, குறிஞ்சிஆண்டவர் கோயில் முதலியன விழிகட்கு விருந்தளிப்பன ஆகும்.

இத்தகைய இயற்கைக் காட்சிகளையும் செயற்கை நலங்களையும் இந்நூலாசிரியர் நன்கு கவனித்து அவற்றைச் செம்மையுறக் கூறியிருத்தல் பெரிதும் பாராட்டுதற்குரியது. இந்நூற்பாக்கள் வெண்பா யாப்பில் அமைந்தவை; இனிய எளிய சொற்களால் இயன்றவை. உவமை, உருவகம் முதலிய அணி வகைகளும், திருக்குறள் போன்ற சீரிய நூற்களின் உயரிய கருத்துக்களும் இச்செய்யுட்களில் ஆங்காங்கு இடம்பெற்றிருத்தல், கற்பவரை மகிழ்விப்பதோடு இவ்வாசிரியர் புலமைத் திறனையும் செய்யுள் இயற்றும் கவி வன்மையையும் செவ்விதின் விளக்குவதாகும்.

தமிழில் காலத்திற்கேற்றவண்ணம் புது நூல்கள் பெருகுதல் வேண்டும் என்னும் நல்லறிஞர் கருத்திற்கேற்ப, இவ்வாசிரியர் இச்சிறுநூலைத் தமிழன்னைக்குக் காணிக்கையாகத் தந்துள்ளனர். பலர் செய்யுட்களைப்பாடி அவற்றை மட்டுமே அச்சிட்டுச் சாதாரண மக்கள் பொருள் உணர முடியாத நிலையில் வெளியிடுகின்றனர். இவ்வாசிரியர் அக்

குறையினை நன்குணர்ந்து, இந்நூலில் ஒவ்வொரு செய்யுளுக்கும் உரிய விளக்கத்தினைத் தந்திருத்தல், இந்நூல் பொது மக்களிடையே நன்கு பரவுதல் வேண்டும் என்னும் இவரது நன்னோக்கத்தை நலமுறக் காட்டுகின்றது. இங்ஙனம் செய்யுளின் பொருளை உரைநடையில் தந்திருத்தலை நான் உளமாரப் பாராட்டுகின்றேன். இந்நூலாசிரியர் மேற்கொண்டுள்ள நன்முயற்சியைத் "தமிழ் வாழ்க!" என்று உதட்டளவிற் கூறுது உளமார வாழ்த்தும் உத்தமர் அனைவரும் படித்துப் பாராட்டக் கடமைப்பட்டுள்ளனர். இக்கவிஞரது செய்யுள் இயற்றும் திறனும், நூல் வெளியீட்டு முயற்சியும் நல்லார் இணக்கம்போல் நாளும் வளர அம்மையப்பர் திருவருளை இறைஞ்சுகின்றேன்.

இக்கவிஞரது முயற்சியை வரவேற்றுச் சொல்லால் ஊக்கமும், பொருளால் ஆக்கமும் தந்து இந்நூலினை இத்திருவுருவில் காணச்செய்த தமிழ்ச் செல்வர் உயர்திரு. கருமுத்து. தி. சுந்தரம் செட்டியார் B. Com., அவர்கள் உண்மைத் தமிழர்தம் உளமார்ந்த பாராட்டிற்கு உரியர் ஆவர்.

மதுரை
1—12—54

மா. இராசமாணிக்கனர்



உயர்திரு. கரு. முத்து. தி. சுந்தரம் செட்டியார் B. Com. அவர்கள்




# கோடை நாற்பது

§குறிஞ்சியாண்டவர் கோயில்

குறிஞ்சி நிலத்தெய்வம் கோலமயில் அண்ணல்
குறிஞ்சி நிலவள்ளிக் கோமான் — இறைஞ்சுபுகழ்
காட்சிதனைக் காணவே கண்ணா யிரம்வேண்டும்
மாட்சிதரும் நன்முருகன் மாண்பு. (1)

**(உரை)** மலைநிலத் தெய்வம் முருகன்; அழகிய மயில் மீதுறையும் அண்ணல்; மலை நிலத்தில் வாழும் குறமகளாம் வள்ளிக்கு மணவாளன்; இத்தகைய பெருமானது யாவரும் வணங்கத்தக்க புகழ்மிகுந்த காட்சியைக் காண்பதற்கு ஆயிரம் கண்கள் வேண்டும். அவனது பெருமை காண்போர்க்குப் பலவகைச் சிறப்பினையும் அருளும்.

---

§ குறிப்பு:- கோடைமலையில் உள்ள குறிஞ்சியாண்டவர் கோயில் (Kurinchi Andavar Temple) குறிப்பிடத்தகும் இடங்களுள் ஒன்று.

**வெள்ளிக் கிழமையொன்றில் வேல்முருகன் கோயிலுக்குள்
உள்ளன்பு மீதூர ஓடினேன்—தெள்ளுதமிழ்
பாடிப்பரவிப் பரம்பொருளைக்கண்டுவந்து
கூடினேன் வீட்டுணர்வு கொண்டு (2)**

முருகக் கடவுளின்மீது கொண்டுள்ள பக்தி அதிகமாகவே ஓர் வெள்ளிக்கிழமையன்று குறிஞ்சியாண்டவர் கோயிலுக்குச் சென்றேன்; தமிழ்ப் பாடல்கள் பல பாடினேன்; ஆண்டவனின் முன்னிலையில் பணிந்து நின்றேன்; வீடுபேற்றைப் பெறுதற்குரிய உணர்வுகொண்டு அவனருளில் கூடினேன்.

## ஏரிப்படகில் காதலர்

**கொஞ்சுமொழிப் பைங்கிளியாள் கூடக் குலவிவரும்
தஞ்சமொழி பேசிவரும் தன்தலைவன் — நெஞ்சமிகும்
அன்புமொழி கேட்டுநீர் ஆடிவரும் அப்படகின்
இன்பத்தை யார்புகல்வார் ஈங்கு. (3)**

கிளிபோன்ற நங்கை கொஞ்சுமொழி கூறிக்கொண்டு தன் கணவன் பக்கத்தில் அமர்ந்துவர, அவள்மொழி கேட்டு மயக்கம்கொண்ட கணவன் தன் மனைவியிடம் தஞ்சம் புகுந்தவன்போல அடைக்கல மொழிகள் பல கூறிவருகிறான். இந்த வார்த்தைகள் எல்லாவற்றையும்கேட்டு மகிழ்ந்து ஏரியின் நீரிலே ஆடி அசைந்து வருகின்ற படகின் மகிழ்ச்சியை எடுத்தியம்ப வல்லார் யார்?

## கரை சேர்க என்ற மொழி

கரைசேர்க! நீவிர் கரைசேர்க! என்றே
பெரியார் சிலர்நின் றுரைப்பர் — புரையோய்!
இகழ்சேர்வாழ் வென்னும் இமிழ்கடலை நீந்திப்
புகழ்க்கரையைச் சேரென்பார் போல், (4)

சில பெரியவர்கள் படகில் வருகின்றவர்களைக் கரை சேருங்கள்! கரை சேருங்கள்! என்று அழைப்பது "உயர்வுடையீர், இகழ்ச்சி மிகுந்த வாழ்க்கைக் கடலைக் கடந்து புகழ்க்கரையை அடையுங்கள்" என்று கூறுவதுபோல் இருக்கிறது.

## நீள்படகுக் காட்சி (Punt)

இன்னுமொரு நற்காட்சி இங்குரைப்பேன் கேட்டிடுவீர்
பொன்னனைய ஏரிப் பொலிதடத்தின் — நன்னீரில்
ஆலிலைமேல் பள்ளிகொண்ட அவ்வண்ணல் போல்ஒருவர்
நீள்படகில் கண்துயில்வார் நீண்டு. (5)

இன்னும் ஒரு நற்காட்சியையும் ஏரியிலே காணலாம். நீண்டிருக்கும் படகிலே ஏறி ஒருவர் படுத்துக்கொண்டு மிதப்பார். அது முன்னொருகாலத்தில் ஆலிலைமேல் படுத்துக் கடலில் மிதந்த திருமாலை நம் நினைவிற்குக் கொண்டு வரும்.

## நீர் அரசன் நிலை

பருவக் குமரியரின் பாதத்தைத் தொட்டுப்
பெருகும் மயக்கத்தைப் பெற்றான் — உருவ
நிலைதளர்ந்தான்; நெஞ்சொடிந்தான்; நீள்ஒலியைக்கொண்
அலைகொண்ட நீரரசன் ஆங்கு. (6) [டான்;

அலைகளைப் பெற்றிருக்கின்ற நீரரசன், இளமைப் பருவமும் கட்டழகும் வாய்ந்த பெண்களின் பாதங்கள் தன்னைத் தொட்டவுடனே அவர்கள் அழகில் மயங்கிக் காதல் உணர்வுகொண்டு வடிவம் மாறினான்; மனம் ஒடிந் தான்; ஆற்றாமல் புலம்பினான்.

## குதிரைமீது வரும் மகன்

வானத்தின் இந்திரனோ வாம்புரவி மீதுவரும்
தானத் தவமகனோ சாற்றிடுவாய்— மீனத்தும்
ஏரிதனைச் சுற்றிநல் இன்பமது கொண்டானின்
சீருவகை கூறுவதோ செப்பு. (7)

தாவி வருகின்ற குதிரையின்மீது ஏறிக்கொண்டு ஏரியைச் சுற்றிவரும் சிறுவன் தேவேந்திரனைப்போலக் காட்சியளிப்பான். குதிரை ஏற்றம்கொள்ளும் சிறுவனின் மகிழ்ச்சிக்கு எல்லை ஏது?

## கூடிவாழும் இயல்பு

பல்வேறு நாட்டார்கள் பன்மொழியைப் பேசுபவர்
பல்வேறும் ஆடையினர் பார்வைக்குப் — பல்வேறு
கொள்கையினர் என்றாலும் கூடிடுவர் ஓரிடத்தில்
உள்ளுணர்வால் ஓரினத்தா ரோது (8)

கோடைகாலத்தில் சுகமாக வாழ்வதற்காகப் பல நாடுகளில் இருந்தும் மக்கள் இங்கு வருகிறார்கள்; பல்வேறு மொழிகள் அவர்களால் பேசப்படுகின்றன; பல நிற ஆடைகளை உடுத்திக்கொள்கிறார்கள்; பலவிதக் கொள்கைகளை உடையவர்களாக இருக்கிறார்கள். என்றாலும் அவர்கள் ஆறறிவு பெற்ற மக்கள் குலத்தைச் சார்ந்தவர்கள் என்பதை நினைத்து ஒற்றுமையாகக்கூடி வாழ்கிறார்கள். இந்த உயர் கருத்தைப் பிறருக்கு எடுத்துக் கூறு.

## மக்களை வாரி அணைக்கும் மங்கையர்

வண்ணப்பூச் சூடி வருகின்ற நற்பெண்டிர்
தண்ணிலவுப் பல்காட்டித் தாவிவரும் — ஒண்ணிறத்து
மக்கள் தமைத்தூக்கி மார்போ டணைத்திடுவார்
தக்கோய் இதைக்காண்பாய் சற்று. (9)

அழகான பூக்களைச் சூடிக்கொண்டு வரும் பெண்கள் நிலவுபோன்ற வெண்மையைக் கொண்டபற்களைக் காட்டிச் சிரித்துக்கொண்டு, ஓடிவருகின்ற தங்கள் குழந்தைகளைக் கையால் வாரி எடுத்து மார்போடு அணைத்து முத்தம் கொடுக்கும் காட்சியைக் கண்டு மகிழ்வாயாக!

## § தூண்மலை (Pillar rocks)

***தூண்போல் நிவந்தங்கே தோன்றுகின்ற மாமலைதான்***
***காண்போரின் நெஞ்சைக் கவர்ந்திடுமே—ஊன் உருகப்***
***பாடிவரும் புள்ளெல்லாம் பாடுவதும் அவ்வழகை***
***ஓடிவரும் காரெல்லாம் ஊர்ந்து.*** ***(10)***

தூண்போல் வடிவம்கொண்டு தோன்றிநிற்கும் மலை தூண்மலை என்று சொல்லப்படும். இத்தகைய தூண்மலை ஒன்று மிகவும் உயரமாக நின்று பார்ப்பவரின் மனத்தைக் கவரும். அம்மலையைச்சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருக்கும் பறவைகள் அம்மலையின் அழகைப் பாடுவதுபோல் தோன்றுகின்றன. பறவையின் பாடலைக்கேட்டு மேகங்கள் மயங்கி அடுத்தடுத்து வந்துகொண்டே யிருக்கின்றன.

---

§ **குறிப்பு:**– தூண்மலையின் அழகைப் பார்க்க வருகின்ற மக்களின் ஊர்திகளும் ஊர்ந்தவண்ணமாக இருக்கும். கோடை மலையில் பார்க்கத்தகும் இடங்களில் தூண் மலையும் ஒன்றாகும்.

## § பேரீச்சம் ஏரி

பெரிய குளம்முதலாப் பேர்பெற்ற ஊரார்
அரியநீர் உண்ண அளிக்கும் — கரியவரைப்
பேர்நீக்கம் கொள்ளத்தான் பெய்திடுமே பால்நீரைப்
பேரீச்சம் ஏரியெனப் பேசு. (11)

பேரீச்சம் என்ற ஏரி பெருமைபொருந்திய பெரிய குளம் முதலாகிய ஊர்களில் உள்ள மக்கள் குடிப்பதற்கு நல்ல தண்ணீரைக் கொடுத்துதவும். கருமை நிறம் கொண்ட மலை என்னும் சொல் நீங்குமாறு பால்போன்ற நீரைப் பொழியும். (கரியவரை—கருமை நிறம்கொண்ட மலை)

## § எருமைக் காடு

உருவத்தைக் கண்டாலே ஓடவுளம் தூண்டும்
பொறுமை மிகக்குறைந்த பொல்லா — எருமைப்பேர்க்
காடொன்று தோன்றிக் கவனத்தை ஈர்க்குமதை
நாடுவதோ தீமை நவில். (12)

---

§ குறிப்பு;- கோடைமலையில் பேரீச்சம் ஏரியும், எருமைக் காடும் பார்க்கவேண்டிய இடங்களாகும்.

காட்டெருமையைப் பார்த்துப் பயந்து மக்களெல்லாம் ஒளிந்து விடுவர். தன்னியல்பாகிய பொறுமைக் குணம் நீங்கித்திரிகின்ற எருமைகள் வாழ்கின்ற காடு எருமைக் காடாகும்; காட்டின் வனப்பு, பார்ப்பவரின் கண்ணையும் மனத்தையும் தன்வயப்படுத்திவிடும். அக்காட்டை மிக நெருங்கிச் செல்வதோ தீமை ஆகும்.

## உயர்மலை

**விண்ணுலகைத் தொட்டங்கே வெல்லும் மலைக்காட்சி
எண்ணத்தில் கொண்டுவரும் இக்கருத்தை—மண்ணின்
எண்ணம் உயர்ந்தாலே எய்திடலாம் வாழ்வைநல் [மேல்
எண்ணம் உயர்க இனிது, (13)**

ஆகாயம் அளவும் உயர்ந்து நிற்கும் மலை நமக்கு அறிவுறுத்துவது என்னவென்றால், மக்களே! நல்ல எண்ணம் நல் வாழ்விற்கு அடிப்படை. ஆகவே நல்ல எண்ணம் கொண்டு நல்வாழ்வை அடைவீர்களாக! என்பதே ஆகும்.

## மேடும் பள்ளமும்

**மேட்டருகே பள்ளமுமே மேவிவரும் அக்காட்சி
ஊட்டுவதும் மக்கள்தமக் கோர்நீதி — நாட்டினிலே
ஏற்றமும் தாழ்வும் எதிரேற்று வந்திடினும்
ஏற்றிடுவீர் வெல்லூக்கம் என்று. (14)**

வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் வாழ்வும் தாழ்வும் மாறி மாறி வந்துகொண்டேயிருக்கும். துன்பம் கண்டு மனம் சோர்தல் கூடாது. ஊக்கத்தைக்கொண்டு துன்பத்தைத் துரத்தி ஓட்டி வெற்றி பெறுதல் வேண்டும். இந்த நீதியை மலையிலே மாறிமாறித் தென்படுகின்ற மேடும பள்ளமும் அறிவுறுத்துகின்றன.

## இயற்கையும் செயற்கையும்

**செயற்கை அழகெல்லாம் சேர்ந்துதிரண் டங்கே**
**இயற்கை யழகுக் கெதிரில் — மயற்கொண்**
**டுனைவெல்லல் எம்போல்வார்க் குண்டோவென் றென்றே**
**இனையாநின் றேங்கிடுமால் இன்று.** (15)

மலையில் மனிதனால் கட்டப்பட்ட செயற்கைக் கட்டிடங்கள் பலவுள. அவை எல்லாம் இயற்கையழகுக்கு முன் போட்டியிட முடியவில்லை. செயற்கை அழகெல்லாம், ஒன்ருய்ச் சேர்ந்து இயற்கை அன்னைக்கு முன் பணிந்து நின்று எம்போல்வார், இயற்கை வனப்பினளாய நின்னை வெல்லவியலுமா என்று மனம் வருந்தி ஏங்குவன போல் தோன்றுகின்றன.

## விருந்து

பழந்தருவாள் பச்சைக் கறிதருவாள் பாரின்
நிழல்தருவாள் நெஞ்சைக் கவரும் — குழல்தருவாள்
§ கம்பளத்தைத் தந்திடுவாள் காட்டில் விருந்தினர்க்குச்
செம்பவள வாயாள் சிரித்து. (16)

நல்ல சுவைபொருந்திய கனிகளையும், பசுமை மிக்க காய்கறிகளையும், குளிர் நிழலையும், நெஞ்சை மயக்கும் வேய்ங்குழலையும், இரத்தினக் கம்பளத்தையும் இன்னும் பல வற்றையும் வந்திருக்கும் மக்களாகிய விருந்தினர்க்குப் பவளம்போன்ற வாயினையுடைய மலையரசி சிரித்துத் தந்திடு வாள்.

## ஒலி

காற்றின் ஒலியும் கலகலவென் றேஒலிக்கும்
ஆற்றின் ஒலியும் அணியிழையார் — போற்றும்
இசைஒலியும் கொல்லும் இடியொலியும் என்றன்
அசைவொழித்து நின்றனவே ஆங்கு. (17)

---

§ குறிப்பு:- சில இடங்களில் இரத்தினக் கம்பளத்தை விரித்தாற்போலப் பல்வேறு நிறம்கொண்ட பூக்கள் உதிர்ந்து விழுந்துகிடக்கும். உட்காருவதற்கு மிகவும் மென்மையாகவும் கண்ணுக்கு இனிமையாகவும் அவை இருக்கும்.

காற்றினால் உண்டாகும் ஓசை, ஆற்றின் ஓசை, அழகு மிக்க பெண்கள் பாடும் பாட்டின் ஓசை, உயிரைக் கொல்லும் இடியின் ஓசை ஆகிய எல்லாம் சேர்ந்து எனது தளர்ச்சியை நீக்கி நின்றன.

## திருவுலா

**குடைபிடிக்கும் சூழ்கொடிதான்; கூடிவரும் வண்டோ!**
**கடமைத் திருப்பாட்டைக் காதில் — தடையின்றி**
**ஊட்டிவரும்; பூக்கள் உதிர்ந்துவிழும்: புள்வாழ்த்தும்**
**காட்டில் திருவுலாக் காண்.** (18)

காட்டிலே ஒரு திருவுலா நடைபெறுகிறது. மலையரசி திருவுலாச் செல்கிறாள். மரங்களில் சூழ்ந்து சூழ்ந்து பின்னிக் கிடக்கின்ற கொடிகளோ, குடையாக நிழல் செய்கின்றன. வண்டுகளோ, தங்கு தடையில்லாமல் உரிமைப் பண் பாடுகின்றன. கொடிப்பூக்கள் உதிர்ந்து விழுந்து வரவேற்புச் செய்கின்றன. இவ்வளவெல்லாம் இருந்தும் வாழ்த்துவதற்குக் கவிஞன் வேண்டாமா? அப்பொறுப்பைப் பறவைகள் ஏற்று வாழ்த்துகின்றன.

## உரிப்பொருள்

**வரைவாழும் மக்களுக்கு வண்புலவர் நூல்தான்**
**புரையில் புணர்ச்சியெனப் போற்றும் — உரிப்பொருளைக்**
**கண்டேன் வியந்தேன் கவிஞர் தருமின்பம்**
**உண்டேன் உவகைமிக வுற்று.** (19)

மலைநிலத்தில் வாழ்கின்ற மக்களுக்குக் கவிதைவளம் பொருந்திய புலவர் பெருமக்கள் புணர்ச்சியை உரிப்பொருளாகக் கூறியுள்ள நுட்பம் வியந்து பாராட்டுவதற்கு உரியதாகும்.

### மலைக்காட்சி

உச்சிமேல் நின்றிவ் வுலகத்தைப் பார்க்குங்கால்
குச்சியெனத் தோன்றும் குறைவுற்ற — நச்சுலக
வாழ்வும் துரும்பாய் வருமே குணமென்னும்
தாழ்வில் மலைமேற் றவர்க்கு (20)

குணமென்னும் மலையின் உச்சியில் நிற்கும் தவத்தோர்க்கு, துன்பம் நிறைந்த உலக வாழ்க்கை எப்படித் துரும்பாய்த் தெரிகிறதோ, அதுபோல கோடைமலையில் நின்று கீழே உள்ள நகரங்களைப் பார்த்தால் அவை சிறிய குச்சிபோலத் தோன்றுகின்றன.

### அருவி

மலையுறுதி கொண்டுள்ள மாக்கவிஞன் ஓர்நல்
மலையாவான்; பாட்டேல்லாம் மாண்புச்—சிலையருவி;
கொட்டுவதால் அன்றிக் குணம்காட்டும் ஒண்மைநிறம்
தொட்டறிந்து காண்பாய் சுகம். (21)

மலை, உறுதிபடைத்தது. கவிஞனும் நெஞ்சுறுதி படைத்தவன். மலையில் இருந்து அருவி கொட்டுகிறது. கவிஞன் என்னும் மலையில் இருந்து கவிதை என்னும் அருவி கொட்டுகிறது. அருவி ஒண்மை நிறம் கொண்டது. கவிதையும் அறிவுமயமான தூயகருத்தைக்கொண்டது. இவ்விரண்டு அருவியிலும் மூழ்கித் திளைப்பாயாக!

## மண்ணில் கோடையின் கொடுமை

எங்கும் கொடுநெருப்பு எங்கும் பெருந்துன்பம்
எங்கும் கதிரவனின் இன்னாத்தீ—பொங்கிடுமால்
மக்களுடன் மன்னுயிர்கள் மாழ்கி மனங்கொதித்து
தற்கொலைசூழ் நெஞ்சுபெறும் தாம். (22)

மண்ணின் மேல் வாழ்கின்ற மக்கள் முதலாகிய உயிர்கள் எல்லாம், உயிரினை மாய்த்துக்கொள்ளலாமா என்று கருதும் அளவுக்கு வெயிலின் வெம்மை அதிகமாகி விட்டது.

## மலையரசியிடம் அடைக்கலம்

பொல்லாக் கதிரவனின் போர்ப்பறைக் கஞ்சியவர்
நல்லாய்! எமைக்காப்பாய் நாடிவந்தோம்—கொள்வாய்!
எனப்பணிந்தார்; இன்கரத்தால் ஏற்றிட்டாய்; வாழ் லை
மனத்தளர்வு நீக்கி மகிழ்ந்து (23)

சூரியன் உலகத்து உயிர்களைப் போருக்கு அழைத்துப் போர்ப்பறையை முழக்கிவிட்டான். அஞ்சிய மக்கள் கோடை மலையரசியிடம் அடைக்கலம் புகுந்தார்கள். அவள் அனைவரையும் முகமலர்ந்து மகிழ்ந்து கையேந்தி வரவேற்று வாழ்வளித்தாள்.

## மலையரசியின் வெற்றி

*ஒளிப்படையான் உன்சோலை ஊட்டும் நிழலுள்*
*ஒளிபடையான் அஞ்சிக்குடக்கோடி—ஒளிபட்டான்*
*வென்றாய் அவனைநின் வெற்றிகண்ட மக்களவர்*
*இன்றுனையே வாழ்த்துகிறார் இங்கு. (24)*

ஒளியினையே தனது சேனையாக உடைய சூரியனால் உனது சோலைக்குள் நுழையமுடியவில்லை. உன்னைக் கண்டதும் பயந்து மேற்கே சென்று மறைந்துவிட்டான். போரிலே வெற்றிகொண்ட உன்னைப் பார்த்து இன்று மக்கள் மகிழ்ச்சியால் வாழ்த்துகிறார்கள்.

## தமிழர் நிலை

*தமிழகத்தின் வாழ்வொளியே! சாரல்சேர் கோடை!*
*அமிழ்தனைய நின்தமிழர் அன்பாய்—இமிழ்கடல்போல்*
*உள்ளார் எனஇருந்தேன்; ஓர்சிலரே அல்லால்மற்*
*றுள்ளாரே உன்னருமை ஓர்ந்து. (25)*

தமிழ்நாட்டு மக்களின் வாழ்க்கைக்கு ஒரு விளக்காய் இருப்பவளே! மழைச்சாரல் நிறைந்த கோடை மலையரசி! அமிழ்தம் போன்ற தமிழர் பலரைக் காணலாம் உனது மலையில் என இருந்தேன். ஒரு சில தமிழர்களேயன்றி ஏனையோர் உன்னருமையை உணர்வதில்லை (உள்ளார்—நினையார்.)

## வளமும் வாழ்வும் தருக

மறந்தனையோ நீதான் மறத்தமிழர் வாழ்வை
மறந்தனரோ அன்னூர்நின் மாண்பை — அறந்தானே
இந்தநிலை மாற எழிலரசி வாழ்வவர்க்குத்
தந்தருள்வாய் செல்வவளம் தந்து. (26)

வீரமிக்க தமிழரை நீ மறந்துவிட்டாயா? அல்லது செந்தமிழர் உன் சிறப்பை மறந்துவிட்டார்களா? ஏதோ அறியேன் தாயே! உன் மக்களை நீ கவனிக்காமலேயே வாழ்கிருயே? தமிழர் அனைவர்க்கும் செல்வ வளத்தைக் கொடுத்து ஆதரிப்பாயாக.

## விறகு

பச்சை விறகென்று பார்மீது காயவைத்தால்
பச்சை மிகுதியதாய்ப் பார்ப்பவரை — அச்சுறுத்தும்
விந்தை அதுவொன்றே? வீறு பலகொள்ளும்
நந்தம் மலையரசி நாடு. (27)

விறகு ஈரமாக இருக்கின்றதே; தரையில் இட்டு, காய வைக்கலாமே என நினைத்துத் தரையில் போட்டுவிட்டுச் சிறிது நேரம் சென்றபிறகு போய்த்தொட்டுப் பார்த்தால், நாம் வியப்படையும்படி முன்னர் இருந்த ஈரத்தைவிட ஈரம் அதிகமாக இருக்கும். நிலம் குளிர்ந்திருப்பதே இதற்குக் காரணம். இத்தகைய இயற்கை நிகழ்ச்சிகள் பல கோடை மலையிலே உண்டு.

## வெந்நீர்

***வெந்நீரும் தண்ணீராய் வேற்றுநிலை கொள்கின்ற***
***தன்மையது வள்ளுவன்சொல் தான்காட்டும்—பொன்னே!***
***நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்***
***கினத்தியல்ப தாகும் அறிவு.*** (28)

வெந்நீர் கொதிக்கின்றதே என நினைத்துச் சிறிதுநேரம் கீழே வைத்தால் குளிர்ச்சி அதிகமாகித் தண்ணீராய் மாறி விடும். வெந்நீர், குளிர்ச்சி நிலத்தைச் சேர்ந்ததால் தன்னியல்பாகிய வெம்மை (சூடு) மாறித்தண்மையைக்கொள்ளு கிறது. இது ஒரு திருக்குறளை நினைவுறுத்துகிறது. அக்குறள்:

"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு" என்பதாகும்.

குறட் கருத்து:—நீர், சேர்ந்த நிலத்திற் கேற்பக் குணம் மாறுகிறது. அதுபோல சேர்ந்திருக்கும் இனத்தவரைப் பொறுத்து அறிவும் மாறுகிறது.

## கோடை மலைப் பெருமை

**துறந்தார் பெருமைதனைச் சொல்லுவதும் வையத்**
**திறந்தாரை எண்ணுவதும் ஏர்கொள் — நறுந்தாரோய்!**
**சீருடைய கோடைச் சிறப்பதனைக் கூறுவதும்**
**ஆராலும் ஆகா வறி.** (29)

உண்மைத் துறவிகளின் பெருமையையும், உலகத்தில் பிறந்து இறந்தவர்களின் கணக்கையும் எங்ஙனம் அளவிட முடியாதோ அதேபோல, கோடைமலை வளத்தையும் அளவிட முடியாது.

## பலநிறப் பூக்கள்

**வானத்து வில்லின் வண்ணம் புனைந்தனவோ**
**மானொத்த நல்லார் மணிவளையோ — கானத்துப்**
**பன்னிறப் பூக்கள்நற் பார்மீது தோன்றிமிக**
**என்மனத்தைக் கொள்ளைகொண் டவே.** (30)

வான வில்லின் பல நிறங்களை ஏற்றுக்கொண்டனவோ அல்லது மான்போன்ற பார்வையைக்கொண்ட பெண்கள் அணிந்துள்ள பலநிற வளையல்களின் நிறங்கள் பலவற்றை ஏற்றுக்கொண்டனவோ என்று நினைக்கும்படி, பல்வேறு நிறம்கொண்ட மலர்கள் தோன்றி என் உள்ளத்தைக் கொள்ளைகொண்டன.

## குகை

இருளில் உருக்கரந்து இன்கோடைக் குன்றில்
மருள்சேர் குகையுண்டு மாதே! — இருள்சூழ்
மனம்காட்டும் வாழ்வதனில் மக்களுக்கு நல்ல
குணம்காட்டும் கொள்கைதனைக் கூறு. (31)

கோடைக் குன்றில் ஒரு குகையுண்டு. அதனுள் இருள் குடிகொண்டிருத்தலால் அதன் முழு அமைப்பையும் அறிதல் இயலாது. இருள்சூழ்ந்த அக்குகை அறியாமை நிறைந்த மனத்தைப் போன்றது. அந்த இருளைப்போக்கிஞல், குகையின் முழு அமைப்பும் வெளிப்படுதல்போல, அறியாமை நீக்கப்பட்ட உள்ளத்தைக்கொண்ட மனிதனது முழுப் பண்பும் வெளிப்படும். இந்த நீதியை அக்குகை அறிவித்து நிற்கிறது.

## கோடை செல் கூட்டம்

ஆலமரச் செம்பழத்திற் காடிவரும் புள்ளினமும்
சீலமுகம் காட்டிச் சிரித்தளிக்கும் — கோலமிகு
வள்ளற்கை நோக்கி வரும்வறியர் கூட்டமும்போல்
தெள்கோடை சென்றிடுவர் சேர்ந்து. (32)

ஆலமரத்தில் உள்ள பழங்களைத் தின்பதற்குப் பறவைக் கூட்டம் செல்வதுபோலவும் முகமலர்ந்து பொருள் வழங்கும் வள்ளலின் கை நோக்கி வறுமையாளரின் கூட்டம்

செல்வதுபோலவும் கோடைக்காலத்தில் இன்பம் நுகர கோடை மலைக்கு மக்கள் கூட்டமாகச் செல்வர்.

## முயற்சிப் பரிசு

**உன்றன் உயர்வடிவும் ஓராப் பலநெறியும்**
**சென்றே யறிந்தார் திறமிக்கோர் — இன்று**
**முயற்சிப் பெரும்பரிசே! மூவாப்பே ரின்பம்**
**அயர்ச்சியற நீதருவா யால். (33)**

மலையரசி! நீ உன் உருவத்தைத் தொடர்பின்றிக் (பல குன்றுகளாகக்) காட்டிக் கொண்டிருந்தாய். மனிதர் இடையருது முயன்று இதற்குமுன் அறியாத பல வழிகளையும் உச்சியையும் கண்டுபிடித்தனர். முயற்சிப் பரிசே! குறையாத பெருநலத்தைத்தந்து அருள்புரிவாயாக.

## மூத்தொழில்

**ஆக்குவாய் பல்லுயிரை; காப்பாய் அறிவோரை;**
**போக்குவாய் வெம்மையெலாம்; பொன்மலையே!—நீக்கமற**
**எங்கும் நிறைந்தருளும் என்னம்மை ஓர்பாகம்**
**தங்கும் இறைவனெனத் தான். (34)**

மேருமலையனையாய்! பல உயிர்களையும் உண்டாக்குவாய்; உன்னருமை அறிந்து வருகின்றவர்களைப் பாதுகாப்பாய்; வெம்மையை அழிப்பாய்; பார்வதியை ஒரு பாகத்

தில் கொண்டுள்ள இறைவனைப்போல நீயும் முத்தொழில் புரிகிறாய்.

## வளைவு இல்லா மரங்கள்

**வளைவின்றி நேரே வளரும் மரங்கள்**
**கலையுணர்வு காட்டும் கனிந்தே — உலகியலில்**
**செங்கோன்மை கொள்வீர்! சிறுவளைவும் கொள்ளாதீர்!**
**எங்கோள் இதைஉணர்வீர் என்று. (35)**

கோணல் என்பதே இல்லாமல் நேரே வளர்ந்திருக்கும் மரங்கள் கலையுணர்ச்சியை உண்டாக்குகின்றன. அவைகள், "உலகத்து மக்களே! அநீதியை அகற்றுங்கள்! நீதியுடன் வாழுங்கள்! முறையற்ற போக்கு, முன் இன்பம் தந்து பின் பெருந்துன்பம் தரும். ஆதலின் உண்மையுடன் வாழுங்கள்! இதுவே எம் கொள்கை ஆகும்" எனக் கூறுவனபோல் தோன்றுகின்றன.

## செங்குட்டுவனும் மலைவளமும்

**கண்ணகிக்கு நற்கோயில் கல்லால் எடுப்பித்த**
**மன்னன்செங் குட்டுவன்நின் மாட்சியதை — எண்ணி**
**மலைவளத்தைக் காண மனைவியுடன் சென்றான்**
**கலைகண்டான் சொற்கண்டேன் காண். (36)**

கண்ணகி என்னும் பத்தினிக்குக் கோயில் எடுப்பித்த செங்குட்டுவன் அச்செயலுக்கு முன்னர் உன்னைப்போன்ற மலைகளின் சிறப்பை உளம்கொண்டு மலைவளம் காண மனைவியுடன் சென்றான். அங்ஙனம் சென்ற இடத்தில் கண்ணகியினது வரலாற்றை அறிந்தான்; அவளுக்குக் கோயில்கட்ட விரும்பினான்; விரும்பியபடி கலைவளம் செறிந்த கோயிலைக் கட்டினான். அவனது இந்த அரிய செயல் சிலப்பதிகாரக் காவியமாக வெளிப்பட்டது. அச் சொல்லோவியக் காட்சியை யான் கண்டேன்.

## கண்டறியாக் காட்சி

கண்டறியாக் காட்சிபல கண்டேன்நான் ஆயிடினும்
கண்டறியாக் காட்சி கரந்தின்னும் — கொண்டுள்ளாய்!
என்றைக்கு நெஞ்சம் இரங்கி அளிப்பாயோ?
தென்றல் மலையரசி! தேர்ந்து. (37)

மலையரசி! என் வாழ்வில் கண்டறியாத பல இனிய காட்சிகளைக் கண்டேன்; என்றாலும், காணவேண்டிய காட்சிகள் இன்னும் பலவற்றை மறைத்து உன்னுள் அடக்கிவைத்துள்ளாய். மனம இரங்கி அவற்றையெல் லாம் என்றைக்கு வெளிக்காட்டுவாயோ? நான் அறியேன்.

## கவியரசரும் புவியரசரும்

கவியரசர் நாவினிலே கட்டுறுதி கொண்ட
புவியரசர் பார்வையிலே பூக்கும் — கவியரசி!
விண்ணுலக மேன்மை வியன்உலகில் பெற்றுவிட்டாய்
தண்ணிலவின் இன்பம் தவழ்ந்து, (38)

கவிபாடும் வன்மைபெற்ற கவியரசர்கள் உன்னைப் பாடுகிறார்கள். மண்ணாளும் வேந்தர்கள் நாள்தோறும் உனது அழகின் வளர்ச்சியிலே கவனத்தைச் செலுத்திக் கொண்டேயிருக்கிறார்கள். விண்ணுலகத்தில் உள்ள இன்பங்களை எல்லாம் இந்த உலகத்திலேயே பெற்றுவிட்டாய். நிலவு தரும் இன்பம் உன்னிடத்தில் தவழ்கிறது.

## நன்றி

வாழ்வின் நலம்தந்தாய்! வாழ்க்கை நெறிதந்தாய்!
வாழ்வின் வளம்தந்தாய்! வாழ்கநீ — வாழ்வினிலே
நன்றி மறவேன்நான் நன்றிபல கூறிடுவேன்
என்றும் எனைமறவாய் நீ. (39)

வாழ்வின் இனிமையையும், அங்ஙனம் வாழப் பல நெறியையும், அவ்வாழ்விற்குரிய வளத்தையும் ஒருங்களித்த அன்னையே! நீ வாழ்க! என் வாழ்வில் உனது நன்றியை மறவேன். நீயும் என்னை மறவாது வாழ்விப்பாயாக,

## வாழ்த்து

வாழ்வு மலர்க! வளமே பெருகுக!
தாழ்வு மறைந்து தமிழ்வாழ்க! — ஆழ்கடல்சேர்
முத்தனைய நன்மக்கள் முல்லைச் சிரிப்புடனே
இத்தரையில் வாழ்க இனிது. (40)

மக்களின் வாழ்விலே எழுச்சியும் எல்லா வளமும் நிறையப் பெருகுக! மொழியறியாதவர்களால் உண்டாகும் தாழ்வெல்லாம் நீங்கித் தமிழ்மொழி என்றுமுள சிறப்புடன் நின்று நிலவுக! உயர்ந்த முத்துப்போன்ற மக்கள் எல்லோரும் இவ்வுலகில் மகிழ்ந்து இன்பத்துடன் வாழ்வார்களாக!







---

விவேகானந்தா அச்சகம், மதுரை-54.

# தி[illegible]தம்

(1) பக்கம் 14: செய்யுள் 24: வரி 2: "அஞ்சி ஒளிந்து" என்று திருத்திப் படிக்க.

(2) பக்கம் 17: செய்யுள் 30: வரி 1: "வானத்துச் சீர் வில்லின்" என்று திருத்திப் படிக்க.

(3) பக்கம் 8: செய்யுள் 12: உரை வரி 2: "தம்மியல் பாகிய பொறுமைக்குணம்" என்று திருத்திப்படிக்க.